# வேமன சதகம்

நல்ல நீலக்கல் ஒன்றே போதும்
தட்டு நிறைய கோலிக்குண்டுகள் எதற்கு?
புவியில் சுவையான குறும்பாட்டு ஒன்று போதாதா?
வாக்கு வன்மையுள்ள வேமனா, கேட்டுக் கொள். 1

கறந்த நல்ல பசும்பால் ஒரு தேக்கரண்டி போதும்
குடம் நிறைய கழுதைப்பால் எதற்கு?
பக்தியுடன் இடும் ஒரு பிடி சோறு போதுமே;
வாக்கு வல்லமையுள்ள வேமனா, கேட்டுக் கொள். 2

மனது சுத்தியுடன் செய்யப்படும் புண்ணியம்
குறைவே யாயிடினும் மிகப் பெரியது
ஆலமரத்தின் விதைகள் எத்துணை சிறியவை?
வாக்கு வன்மையுள்ள வேமனா, கேட்டுக் கொள். 3

நிர்மலமற்ற மனத்திற்கு ஆச்சாரம் எதற்கு?
பாத்திரம் சுத்தமாய் இல்லாத சமையல் எதற்கு?
மன அமைதியற்றவர்களுக்கு சிவபூஜை எதற்கு?
வாக்கு வன்மையுள்ள வேமனா, கேட்டுக் கொள். 4

மிளகு பார்ப்பதற்கு மேலே கருப்பாய் இருக்கும்
உள்ளே கடித்தால் சுள்ளென்று உறைக்கும்
மேலோர் தன்மை இவ்வண்ணமே புலப்படும்
வாக்கு வன்மையுள்ள வேமனா கேட்டுக் கொள். 5

கஸ்தூரி மேலே கருப்பாய் இருக்கும்
அதன் நறுமணமோ எங்கும் பரவி நிற்கும்
மேலோர் குணமும் இப்படித்தான்
வாக்கு வன்மையுள்ள வேமனா தெரிந்து கொள். 6

அற்பன் எப்போதும் ஆடம்பரமாகப் பேசுவான்.
நல்லோன் பேசுவான் நிதானமாக
வெங்கலம் முழங்குவது போல் தங்கம் முழங்குமா?
வாக்கு வன்மையுள்ள வேமனா கேட்டுக் கொள். 7

கங்கை எப்போதும் ஓசையின்றி ஓடும்
அழுக்குக் கால்வாயோ பெரும் முழக்கமிட்டு ஓடும்.
ஆன்றோர்களும் அற்பருக்கான வித்தியாசம் இதுவே
வாக்கு வன்மையுள்ள வேமனா கேட்டுக் கொள். 8

ஏதும் அறியாது போல் இருப்பவன் புத்திசாலி.
எல்லாம் தெரிந்தது போல் நடிப்பவன் அவமானப்படலாம்.
அனைத்தும் தெரிந்தும் சும்மா இருப்பவனே உத்தமயோகி
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 9

பூஜையை விடச் சிறந்தது விசாலமான புத்தி.
சொல்லினை விட மனம் கெட்டிப்பட வேண்டும்.
குலத்தை விடவும் சிறந்தது நல்ல குணம்.
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 10

நம் குலத்தில் ஒரு நல்லவன் இருப்பின்
விளங்கிவிடும் அவர் தம் குலம்.
இது அடர்ந்த காட்டின் இடையில் சந்தனமாக இருப்பது போல
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 11

குணம் கெட்டவன் ஒருவன் குலத்தில் இருப்பானாகில்
குலம் கெடும் அவன் குணத்தினாலே
நல்ல விளைநிலத்தில் பதர் தோன்றினாற்போல
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 12

அத்திப்பழம் பார்க்க அழகாய் இருக்கும்.
உள்ளே உதிர்த்துப் பார்த்தால் புழுவாய் இருக்கும்.
அற்பர்குணம் மேலே கெட்டியாகவும் உள்புறம் லேசாகவும் இருக்கும்.
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 13

உத்தமமான வம்சத்தில் ஒரு துஷ்டன் பிறந்தால்
அவனே அழிப்பான் அவன் வம்சத்தினை
அதாவது கரும்பின் இனிப்பைப் பதர் அழிப்பது போல
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 14

இராமன் ஒருவன் பிறந்து ரவிகுலத்தை ஈடேற்றினான்
துரியோதனன் பிறந்து குலத்தை அழித்தான்.
உலகத்தில் புண்ணிய பாவமென்பது இதுவே அல்லவா?
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 15

வேரில் பிடித்த புழு மரத்தினை சாய்த்து விடும்
இலைகளில் பிடித்த புழு இலைகளை அழித்துவிடும்
கொடியவன் சேர்க்கை நல்லவனை அழித்து விடும்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 16

கொடியவன் ஒருவனை அருகில் சேர்த்தால்
எத்தகைய ஆளுக்கும் துன்பம் வந்து சேரும்
வயிற்றில் புகுந்த ஈ ஒன்று இடும்பைத் தருவது போலே
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 17

கொடியவன் எத்தனை கல்வி கற்றாலும்
கொடியவன் ஆவதன்றி நல்லவன் ஆகமாட்டான்
சுகந்த நறுமணங்களை நுகரும் கழுதை யானையாக முடியுமா?
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 18

பண்டிதர்களுக்கு இடையில் இருப்பதினால் மட்டும்
ஒருவன் பண்டிதன் ஆகிவிட மாட்டான்
அன்னங்களுக்கு இடையில் ஒருகொக்கு இருப்பது போலதான் இதுவும்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 19

அற்பனுக்கு அதிகார பலம் வந்தால்
பெரிய மனிதர்களைக்கூட திட்டி அலைக்கழிப்பான்
செருப்பினை மெல்லும் நாய்க்கு கரும்பின் சுவை தெரியுமா?
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 20

அற்பன் ஒருவனுக்கு அதிகம் செல்வம் சேர்ந்தால்
பெரிய மனிதர்களைக் கூட திட்டி விரட்டி விடுவான்
பெரிய மனிதர்களின் மேன்மையை செல்வந்தன் எப்படி அறிவான்?
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 21

எருமைகூட ஒரு வருடம் சொல்லிக் கொடுத்தால்
சூட்சுமத்தைப் புரிந்து கொண்டு நடக்கும் - ஆனால்
மூடன் எத்தனை ஆண்டுகளாயினும் இதனை அறிய மாட்டான்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 22

எலியின் தோலைக் கொணர்ந்து ஓராண்டு துவைத்தாலும்
கருப்புப் போய் வெளுத்து விடாது.
மரபொம்மையைக் கொண்டு வந்து அடித்தாலும் பேசுமா என்ன?
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 23

பாம்மைப் போன்ற மோசமான ஜீவன் வேறெதுவும் இல்லை
அது கூட பாம்பாட்டியின் மகுடிக்கேற்ப ஆடும்.
ஆனால் மூர்க்கனின் குணத்தை மாற்ற வல்லார் எவரும் இலர்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 24

என்ன தான் பால்விட்டு வளர்த்தாலும்
வேம்பு இனிப்பதென்பது எளிதல்ல - அதுபோல
கொடியவன் ஒரு நாளும் நல்லவனாக முடியாது
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 25

ஒரு கசப்பான பழத்தில் என்னதான் பாலும் சர்க்கரையும்
கலந்து சேர்த்தாலும் அதன் கசப்பு மாறாது- அதே போன்று
துஷ்ட மானுடர்களுக்கு நல்ல புத்தி வரவே வராது
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 26

வேம்பு பல்வேறு விதங்களில், வேர் வரையிலும்
மருந்தாகப் பயன்படும் ஆனால் சற்றும் தயையற்ற
கொடியவன் எதற்குப் பயன்படுவான்?
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 27

ஊர், பெயர் தெரியாத உபயோகமற்றவனுடன்
சேர்ந்திருந்தால் நம்மையும் உபயோகமற்றவனாகவே பாவிப்பர்.
பனைமரத்தின் கீழிருந்து பால் குடித்தாலும் அதனை கள்ளே என்பர்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 28

வீட்டில் இருந்து பாலைக் குடித்துக் கொண்டிருந்தாலும்
அதனை மதுபானம் என்றே கருதுவர்.
வேண்டாத இடத்தில் இருந்தால் இத்தகைய அவமானங்கள்
தவிர்க்கமுடியாதவை
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 29

கோபத்துடன் செய்யும் எந்த செயலும் பயன்தராது.
கோபத்தில் செய்யும் செயல் தீமையாகவே முடியும்.
பழுக்காத காயைக் கொணர்ந்து மூலையில்போட்டால் அது பழுக்குமா?
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 30

கோபித்துக் கொண்டால் நம் பெருந்தன்மை போய்விடும்.
கோபத்தினால் மிகுந்த கேடு விளையும்.
கோபத்தை அடக்கினால் அனைத்து நன்மைகளும் கைகூடும்.
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 31

தண்ணீரில் ஓடம் ஒரு சீராய் ஒடும்.
நிலத்தில் ஓரிரு அடிகள் கூட நகராது
தன் நிலை மாறியவன் எதற்கும் பயன்பட மாட்டான்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 32

நீரில் பலங்கொண்டு பாய்ந்து செல்லும் மீன்
வெளியில் ஒரு முழங்கூட பாய இயலாது
இது ஸ்தான பலமின்றி வேறு பலமென்ன?
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 33

தண்ணீரில் யானையைக்கூட வெல்லவல்ல முதலை
வெளியில் நாயினால் படாத பாடுபடும்.
இது இருக்குமிடத்தின் பலமன்றி வேறு பலமில்லை
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 34

குலமற்றவன் தன் பணபலத்தால் சிறந்து விளங்கிடுவான்.
குலமற்றவன் பணமற்றவன் ஆகில் கீழாகிப் போவான்.
ஆதலால் குலத்தை விடவும் பணமே உயர்ந்தது.
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 35

நற்குலமுடையவனும், கோத்திரம் உடையவனும்
வித்யையைக் கற்று, சிறந்து விளங்குபவனும்
பணம் படைத்தவனுக்கு அடிமைக்கொப்பவர்களே
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 36

கண்டும் காணாதது போல் இருப்பதுவும்
கேட்டும் கேட்காதது போல் நடிப்பதுவும்
பணக்காரர்களுக்கான கொடி நோய்.
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 37

மலட்டு மாட்டினைக் கொண்டு பால்கறக்க நினைத்தால்
பால் தராததுடன் பல்லுதிர எட்டியும் உதைக்கும்
கருமியிடம் பணம் கேட்டபின் நிலைமை இத்தகையதுதான்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 38

ஆட்டின் குரல்வளையைப் பிடித்து பால் கறக்க முயன்றால்
பால் எப்படி கிடைக்க வழியில்லையோ, அப்படி
கருமியிடம் தானம் கேட்டு எந்த பயனும் இல்லை
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 39

எதைக் கொண்டுவந்தோம்? எவ்விடம் எடுத்துச் செல்வோம்?
பிறப்பின் போதும், பின்பு இறக்கும் போதும்
பணம் எங்கு செல்லும்? எப்படிச் செல்லும்?
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 40

இந்த சரீரம் யாருடைய சொத்தென்று காப்பாற்றுகிறோம்?
பொருள் யாருடையதென்று சேர்த்து வைக்கிறோம்?
உயிர் யாருக்குரியதென்று அப்படி காப்பாற்றுகிறோம்?
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 41

தானம் செய்ய விரும்பாத மனிதர்கள்
உலகில் பிறந்து தான் என்னபயன்? இறந்தால் தான் என்ன?
புற்றில் தோன்றும் கரையான்கள் பிறக்கின்றன. பின் மடிகின்றன
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 42

நல்நடத்தையுடையவன் யோசித்துக் கடலையும்
கடந்து விடுவான் மேலும் மனதினை நிலைநிறுத்தி
சரியான முறையில் பரிபூரணத்தையும் அடைவான்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 43

உப்பும் கர்ப்பூரமும் பார்க்க ஒன்று போல் இருக்கும்
பார்க்க ருசிக்க ருசிகளில் வேறுபடும்
அதே போன்று மக்களிடம் அதிருஷ்டம் செய்தவர்கள் வேறுபடுவர்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 44

விநயத்துடன் நடந்து, குருவை மதித்து
மனத்தினை ஒருமைபடுத்தி, சாதிகளை விட்டொழித்து
உயிருள்ளவரை ஒன்று போலவே நடந்து கொள்வான்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 45

தங்க நகைகள் பலவாயினும் தங்கம் ஒன்றே
எத்துணை மாடுகள் இருப்பினும் பால் ஒன்றே
எத்தனைவிதமான பூக்கள் இருப்பினும், பூஜை ஒன்றே
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 46

பொய் பேசும் கபட சந்நியாசி கர்ம பந்தங்களையே போதிப்பான்
மத்திய ரகமான குரு மந்திரோபதேசம் செய்வான் - உத்தம
குருவானவன் நம்மை மோட்ச சாம்ராஜ்ஜியத்திற்கே இட்டு செல்வான்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 47

குடத்தை கும்பமென்றாலும், மலையை பர்வதமென்றாலும்
உப்பை இலவணமென்றாலும், ஒன்றேதான்
பாஷைகள் வெவ்வேறினினும் பர தத்துவம் ஒன்றே
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 48

அடர்ந்த காட்டில் தீபிடித்துக் கொள்வது போலவும்
கடைய கடைய வெண்ணெயிலிருந்து நெய் வருவது போலவும்
நினைக்க நினைக்க மனதில் தத்துவங்கள் தாமே தோன்றும்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 49

உலகமெல்லாம் சுற்றி வந்து பெரும் புண்ணியம் அத்துணையும்
தெள்ளிய நீரோடை போன்ற உள்ளும் புறமும் உடைய
சாதுக்களை கண்ட மாத்திரத்தில் கிட்டி விடும்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 50

அலைகளில் நீர்க்குமிழிகள் தோன்றும் கணமே மறைந்துவிடும்
கனவில் தோன்றிய செல்வம் காணப்படுவதில்லை
உலகில் போக பாக்கியவான்களின் நிலை இதுவேயல்லவா?
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 51

தகுந்த ஒரு குரங்கினைக் கொணர்ந்து, புதுத்
துணிகளைஉடுக்க வைத்து, சேவிப்பது போலத்தான்
நீதியற்றவன் சேர்க்கையில் பயனற்றவன் இருப்பதுவும்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 52

பொய் உரைப்பவனை கிராம நிர்வாகி அறிவான்.
உண்மை பேசுபவனை இறைவன் அறிவான்.
மொக்கத் தின்பவனை மனைவி அறிவாள்.
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 53

பொய்யுரைப்பவனை பெருமாள் அறிவார்.
மேடு பள்ளங்களை ஓடும் தண்ணீர் அறியும்.
தன் கர்ப்பத்தை தாய் அறிவாள்.
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 54

அழகுக்கு உடையுடனும், சீவாத தலையுடனும்
அழகான உடலுடனும் இருப்பவனை
எத்துணை குலச்சிறப்பானவனும் மதிக்க மாட்டான்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 55

உலகில் மரத்தின் பால் கசப்பென்பர் சிலபேர்
அதே போல் எருமைப்பால் இதமென்றும் சொல்வர்
பத்துபேர் சொல்லும் விஷயமே உண்மையாகிப் போகிறது
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 56

உப்பில்லா பண்டம் ருசியைக் கெடுக்கும்.
உப்பில்லாத பண்டத்தினால் உபயோகம் ஏதுமில்லை
கடன் இல்லாதவனே பெரிய சம்பத்துக்குரியவன்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 57

எதற்கும் பிடிவாதம் பிடிக்கக்கூடாது அப்படி
ஒருக்கால் பிடிவாதம் பிடித்துவிட்டால் பின் விடக்கூடாது
அப்படியான பிடிவாதத்தினால் தோற்பதைவிட சாவது மேல்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 58

பாடப் பாட ராகம் கூடும்
வேம்பு தின்னத் தின்ன ருசி கூடும்
எனவே உலகின் பலமுயற்சிகள் இப்படித்தான் சாதனையாகின்றன
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 59

தப்பை எண்ணுபவர்கள் பல்லாயிரம் பேர் உள்ளனர்.
உலகில் அனைத்து மக்களிடம் தப்புள்ளது.
பிறர் தவற்றினை அறிபவர்கள் தம் தப்பை உணரார்.
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 60

துஷ்டன் தன்னிடத்தில் பல தவறுகள் இருக்கும்போது
பிறர் தவறுகளையே பார்த்திருப்பான் போல
பழுத்த இலையைப் பார்த்து குருத்தோலை சிரித்து போல
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 61

இரும்பு ஒடிந்து விட்டால் மூன்று முறையாவது காய்ச்சி
கிரமப்படி ஒட்டவைத்து விடலாம் - ஆனால்
மனது உடைந்து விட்டால் பின்னர் ஒட்ட வைப்பது கடினம்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 62

சிலபேர் தாம் கெடுவதுடன் பிறரையும் கெடுக்க எண்ணுவர்.
தன்வினை தன்னைச்சுடும் என்ற உண்மையை
இறைவன் அறிய மாட்டானா என்ன?
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 63

கொல்ல வேண்டிய பகைவனையும் கொல்லாமல்
விடுவதன்றி, தம்மால் முயன்ற நன்மையையும்
செய்வதே அவன் மனதை மாற்றும் வழி
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 64

நன்றாகப் பேசி, மனத்தினை குளிர்வித்து
நன்கு பிரியமுடன் நடந்தாலன்றி
ஒருவர் கைப்பணம் எப்படி நமக்கு வந்து சேரும்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 65

உபயோகமற்றவனுக்குப் பெருங்காசு கொடுத்து
அவனை பின்னாடி வைத்துக் கொண்டு திரிபவன் பைத்தியக்காரன்
பூனை உண்ட கோழி அழைத்தாலும் பேசுமோ?
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 66

மழை பொய்த்து விடின் பஞ்சம் வந்து சேரும்
மழை அதிகம் பெய்தால் வெள்ளம் வரும்.
மழையும், பஞ்சமும், வாழ்க்கையின் தத்துவங்கள்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 67

உலகில் பிறந்த மனிதர்களெல்லாம் இறவாதிருந்தால்
உலகமே ஜன மயமாகிவிடும்.
யமனின் கணக்குப்படி மக்கள் தொகை குறைந்து போகும்?
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 68

மழை எப்போது வரும், உயிர் எப்போது போகும்
என்பதை எந்த ஒருவராலும் கணிக்க இயலாது
அதனை அறிந்து விடாமல் கலி எப்படி முன்செல்லும்?
வாக்கு வல்லமை படைத்த வேமனா கேட்டுக் கொள். 69

சிப்பியில் விழும் நீர் முத்தாக மாறுகிறது.
தண்ணீர் விழுந்த நீர்த்துளி கலந்து மறைகிறது
அதிர்ஷ்டமிருந்தால் இத்தகையது தன்னால் நடக்கும்
வாக்கு வல்லமை படைத்தவேமனா கேட்டுக் கொள். 70

தவிட்டரிசிப் பானையை நாய் உருட்டியது என்ற
பழமொழிக்கேற்ப, வைசியன் சேர்த்த செல்வத்தை
தகுதியற்றோர் அடைய முனைவர்
புத்தியுள்ள வேமனா கேட்டுக் கொள் 71

தகாத இடத்தில் நாம் பணக்காரர் எனக் கூறலாகாது
தங்களை தாழ்த்திக் கொள்வதால் எந்தக் குறையும் இல்லை
பெரிய மலைகூட கண்ணாடியில் சிறிதாகத்தானே தெரிகிறது
வாக்கு வல்லமை படைத்த வேமனா கேட்டுக் கொள். 72

நம் நிலை மாறும்போது நம் பழக்கங்களை மாற்றிக் கொண்டு
காலத்திற்கேற்றபடி வாழ வேண்டும்.
நிலை மாறியதால் அர்ஜுனன் விராடனுக்கு சேவை செய்யவில்லையா?
வாக்குவல்லமை படைத்த வேமனா கேட்டுக் கொள். 73

கர்ம பலாபலன்களை மாற்ற இயலாது
தர்மராஜாவைப் போன்ற ஒருவனை அந்த தெய்வம்
அடிமையாகப் பணி செய்ய வைக்கவில்லையா?
வாக்குவல்லமை படைத்த வேமனா கேட்டுக் கொள். 74

லட்சுமி தேவியின் இருப்பிடமொத்த இலங்கையை
ஒரு சிறு குரங்கு கூட்டமொன்று வெல்லவில்லையா?
கேடுகாலம் வரும்பொழுது அற்பர்கள் அழிந்து விடுவர்
வாக்குவல்லமை படைத்த வேமனா கேட்டுக் கொள். 75

சிங்கம் எதிர்த்தாலும் சிக்கிக் கொண்டால்
பக்கம் பக்கமாய் கடித்து வேதனைப்படுத்தும் நாய்
பலமிலந்து போனால் பிடிவாதம் பிடிக்க இயலுமா?
வலிமை இழந்து விடாமல் பிடிவாதம் செல்லாது
வாக்குவல்லமை படைத்த வேமனா கேட்டுக் கொள். 76

கொடை வழங்குபவனுடன் ஒரு கருமி இருப்பான்
கருமி அவனை கொடை வழங்க விட மாட்டான்
நல்ல கல்ப விருக்ஷத்தில் கீழேயுள்ள பதரைப் போல
வாக்குவல்லமை படைத்த வேமனா கேட்டுக் கொள். 77

இல்லையொன்று சொல்லாமல், மறுத்து உரைக்காமல்
நிலை தடுமாறாமல், சந்தேகப் படாமல் இது நம் சொத்து
இல்லையென்ற உணர்வுடன் கொடுப்பதுவே கொடை
வாக்குவல்லமை படைத்த வேமனா கேட்டுக் கொள். 78

பெரும் செல்வம் சேர்த்துவைப்பது, தானம் கொடுக்காமல்
தானும் உண்ணாமல், தேனைச் சேகரித்து
வழிப்போக்கர்களுக்கு அளிப்பதுபோல் கொடுப்பான் கருமி
வாக்குவல்லமை படைத்த வேமனா கேட்டுக் கொள். 79

அனுசரணை இல்லாத இடங்களில் நம் சிறப்பினை பறைசாற்றத்
தேவையில்லை, தாழ்ந்து போவதால் குறைஎதுவும் இல்லை
மலைகூட கண்ணாடியில் சிறிதாகத் தானே தெரிகிறது
புத்தியுள்ள வேமனா கேட்டுக் கொள். 80

கும்பகோணம் போவதினால் நாய் சிங்கமாகாது.
காசிக்குப் போவதினால் பன்றி யானையாகி விடாது.
ஒரு தகுதியற்ற மனிதன் ஒரு போதும் உயர்ந்து விட முடியாது
வாக்குவல்லமை படைத்த வேமனா கேட்டுக் கொள். 81

தவிட்டரிசிப் பானையை நாய் உருட்டியது
என்ற பழமொழிக்கேற்ப
வைசியனின் செல்வம் கீழோர் பால்படும்
புத்தியுள்ள வேமனா கேட்டுக் கொள். 82

தானம் செய்யாதவனை என்னதான் வேண்டினாலும்
அவன் இவ்வுலகில் தர்ம செய்பவனாக முடியாது
சமுத்திரத்தில் வைத்தாலும் அவுர் தர்ப்பையாக முடியுமா?
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 83

கற்பாறையாயிடினும் அதனைச் சிதைத்து விடலாம்
பெரிய மலையை கூட மாவாக்கி விடலாம்
ஆனால் மதியாளன் மனத்தைக் கரைக்க முடியாது
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 84

கோணலான கம்பினை நேர் செய்யலாம்
மலையை உடைத்து மாவாக்கலாம்
ஆனால் கடின மனதுடையவனை அசைக்க முடியாது
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 85

பணம் படைத்தவனின் முகுதுப்புண் கூட
உலகில் மிகப் பெரிதாகப் பேசப்படும்
ஆனால் ஏழையின் வீட்டுக் கல்யாணம் கூட யாரும் அறியார்.
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 86

ஆபத்து வேளையில் சொந்தங்கள் கூட அணுக மாட்டார்கள்
பயம்வந்த வேளையில் வீரம் கைவிட்டு விடும்
வறுமை வரும்போது தான் மனைவியும் திரஸ்கரிப்பாள்
வாக்கு வல்லமை படைத்த வேமனா கேட்டுக் கொள். 87

மனைவியின் பேச்சைக் கேட்டு அண்ணன் தம்பிகளை விட்டுத்
தனிக்குடித்தனம் போகிறவன் பைத்தியக்காரன்
நாயின் வாலைப்பிடித்துகொண்டு கோதாவரி நதியைக்கடக்க இயலுமா?
வாக்கு வல்லமை படைத்த வேமனா கேட்டுக் கொள். 88

புருஷனின் காலத்தில் கஷ்டப்பட்டாலும்
மகனின் காலத்தில் சுகப்படுவாள் பெண்.
எவருக்கும் இல்லாமையும் இருப்பதுவும் இயல்பே
வாக்கு வல்லமை படைத்த வேமனா கேட்டுக் கொள். 89

செருப்பில் புகுந்த சிறுகல், காதில் புகுந்த ஈ
கண்களில் விழுந்த தூசி, காலில் தைத்த முள்
வீட்டில் நடக்கும் சண்டை இவைகள் நம்மை பெரிதும் பாதிக்கும்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 90

தாய் தந்தையிடம் கருணையற்ற புதல்வன்
பிறந்துதான் என்ன? இறந்துதான் என்ன?
தன் வீட்டில் பிறந்து வளராத மனைவியின் சேவகன் அவன்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 91

தனக்கு செல்வம் இல்லையெனில் கடவுளைத் திட்டுவான்.
தனக்கு செல்வம் கிடைத்தால் கடவுளை மறப்பான்.
மனிதர்களுக்கும் கடவுளுக்குமான சம்பந்தம் அதுதானா?
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 92

சொல்வது ஒன்று, சிந்திப்பது வேறொன்று
தன் குணம் ஒன்று வெளிக்காட்டுவது வேறொன்று
இப்படிப்பட்டவர்களுக்கு மோக்ஷம் எப்படி கிட்டும்?
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 93

அந்தரங்கத்தில் ஆயிரம் தவறுகள் செய்துவிட்டு
மிகவும் நல்லவன் போல் மனிதன் இருப்பான்
பிறருக்குத் தெரியாவிடினும் படைத்தவனுக்குத் தெரியாதா?
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 94

வீட்டில் நுழைந்த நாய் சட்டிகளை உருட்டுவது போல
கோவிலுக்குச் செல்லும் திருடன் முடிச்சவிழ பார்ப்பனேயன்றி
இறைவனைக் கண்டு வணங்க மாட்டான்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 95

பல்வேறு மொழிகளை அறிந்து, காஷாயம் தரித்தால்
மோக்ஷம் உடனே கிட்டி விடாது
தலை மொட்டையாவது போல் அவைகளும் மழிக்கப்பட வேண்டும்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 96

மூடன் சீடனை மெச்சிக் கொள்வான்
ஞானமற்றவன் கருமியை மெச்சுவான்
பன்றி சகதியைப் போற்றுமேயன்றி பன்னீரைப் போற்றுமா?
வாக்கு வல்லமை படைத்த வேமனா கேட்டுக் கொள். 97

கண்ணாடி குப்பிக்குள் வந்த விளக்கு எப்படி
சுடர்விட்டு பிரகாசிக்குமோ அதுபோல
தெளிந்த அறிவாளிகளின் ஞானம் அப்படி விளங்கும்
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 98

மிருகம் மிருகம் என்று பசுவைச் சொல்வார்கள்
மிருகத்தை விடவும் கேவலம் மூர்க்கன்
மிருகத்திற்கு இருக்கும் குணம்கூட மூடனுக்கு இல்லை
வாக்கு வல்லமை படைத்த வேமனா கேட்டுக் கொள். 99

பானையில் ஓட்டை விழுந்தால் அதனை அடைத்து
ஒப்பேற்றி விடலாம் நன்றாக! - ஆனால்
வெட்டியாய் உட்கார்ந்திருக்கும் மனிதனை
தேறச்செய்தல் அரிதினும் அரிது.
வாக்கு வல்லமையுள்ள வேமனா கேட்டுக் கொள். 100

வேமன சதகம் முற்றிற்று.

சுபம்